# ஸ்ரீ கணேச பஞ்சரத்னம்
# ஸ்ரீ முருகன் ஸுப்ரபாதம், நூற்றெட்டு



ஸ்ரீ ஆதிசங்கர பகவத் பாத வேத ஸபா
திருவல்லிக்கேணி : : சென்னை-5

1972] [ஞானயக்ஞம்

## ஸ்ரீ கணேச பஞ்சரத்னம் (தமிழ் பாக்கள்)

கையதில் மோதகத்தைக் களிப்போடு வைத்து காட்சி தந்து
வையகம் காத்துயர் வாழ்வளித்தே கொடும் வறுமை நீக்கும்
ஐயன் பிறை சூடி அசுரகயன் வென்றோன் அல்லல் போக்கும்
தெய்வம் விநாயகனைத் தேடிப் பணிந்திடுவேன் தெரிந்து
தெரிந்து வணங்கினோரைத் தீங்கின்றி காக்கும் தேவனவன்
அறிந்தும் அடிபணியார்க்கு அறிவுறுத்தும் ஆதவனும்



சிறந்தோர்க்குயர்ந்தவனும் சிவகணத்தின் தேவனையே
புரிந்து வணங்கிடுவேன் புனிதமகேசனைப் போற்றி.
போற்றும் யாவர்க்கும் புவனமெலாம் நலம் புரிந்திடுவோன்
தோற்றும் பெருவயிறும் துதிக்கையொடு தூயமுகமும்
ஊற்றுப் பெருக்கென உயர் கருணைகாட்டும் உமைபாலன்
ஆற்றலுடன் அசுரகயன் அழித்தோன் அடிபணிவேன்.

பணியும் பக்தர்களின் பயம் நீக்கி அபயமருளும்
மணியோ மறைபோற்றும் மகேசன் மனமகிழ் மகனும்
அணியும் அகந்தையுடை அசுரரை அழித்தவனும்
துணியும் செயல் தொடங்கத் துணைபுரிய துதிக்கின்றேன்
துதிக்கின்ற யாவர்க்கும் துணையிருக்கும் துதிக்கையுள்ளான்
விதிக்கின்ற யமனையுமே விரட்டிடும் விடமுண்டோன்




மதிக்கின்ற யோகியரின் மனத்தாளும் மகன் முகத்தில்
உதிக்கின்ற ஒளிவீசும் ஒருதந்தமே உற்றவனும்
உற்றதொரு உயர் கவியை உளமாற உதயத்தில்
கற்றோத கடைத்தேறிகணபதியின் கருணைதனைப்
பெற்றிடுவர் கவிப்புலமை பிள்ளையுடன் பெருஞ்செல்வம்
அற்றிடுமே பிணிபீடை, ஆயுளோங்க அருளும் கையே.

# ஸ்ரீ ஸுப்ரஹ்மண்ய ஸுப்ரபாதம்

பார்வதீ ஸுப்ரஜா: ! ஸ்கந்த! பூர்வா ஸந்த்யா ப்ரவர்த்ததே
உத்திஷ்ட க்ருத்திகாபுத்ர ! கர்த்தவ்யம் லோகஸங்கிரஹம். 1

உத்திஷ்டோத்திஷ்ட ஷட்வக்த்ர ! உத்திஷ்டபஹுலாஸுத!
உத்திஷ்ட தேவஸேனேச ! த்ரைலோக்யம் மங்களம் குரு. 2



ஸுப்ராதமஸ்து சசிசேகரநந்தனாய
ஸுப்ராதமஸ்து சரணாகத ரக்ஷகாய
ஸுப்ராதமஸ்து சரதிந்துஸாமானனாய
ஸுப்ராதமஸ்து சரகானனஸம்பவாய. 3



ஸுப்ராதமஸ்து சரசக்திதநுர்தராய
ஸுப்ராதமஸ்து சமலாபஹதிவ்யமூர்த்தே
ஸாப்ராதமஸ்து சதகோடி ரவிப்ரபாய
ஸுப்ராதமஸ்து சசிசூடஸுதாய துப்யம். 4

ஸுப்ராதமஸ்து ஸுரஸைன்ய ஸுரக்ஷகாய
ஸுப்ராதமஸ்து தநுஜேந்த்ரவிநாசகாய





ஸுப்ராதமஸ்து கலிகல்மஷநாசனுய
ஸுப்ராதமஸ்து கருணுகரதிவ்யமூர்த்தே! 5

ஷட்கோணமத்யவிலஸத் ப்ரணவஸ்வரூப !
ஷட்பாவநாசந ! ஷடானன !ஷட்கிரீட !
ஷஷ்டீவ்ரதப்ரிய ! விபோ ! பலினீஸமாக்ய-
தாராதரேந்த்ரவஸதே ! தவஸுப்ரபாதம். 6

ஸ்ரீவேதஸூக்த ஸகலாகம மந்த்ரரூப !
ஸ்ரீகார்த்திகேய ! கமலானன ! தாரகாரே !
ஸ்ரீபார்வதீதனய ! பாவனநாமதேய !
தாராதரேந்த்ரவஸதே ! தவஸூப்ரபாதம். 7

ஸ்ரீஸ்கந்த புஷ்கரிணீகா ஸலிலா ப்லுதாம்ங்கா:
ஸ்ரீபஸ்ம ருத்ரமணிபூஷித திவ்ய காத்ரா:



த்வத்ஸந்நிதௌ ப்ரதிதினம் ப்ரவிசந்திபக்தா:
தாராதரேந்த்ரவஸதே ! தவஸூப்ரபாதம். 8

ஸ்ரீகும்பஸம்பவ சுகப்ரமுகாமுனீந்த்ரா:
ஸ்ரீபாரிஜாதகுஸூமானிகரே க்ருஹித்வா
ஸ்ரீபாதபத்மயுகளம் பவதோऽர்ச்சயந்தி
தாராதரேந்த்ரவஸதே ! தவஸூப்ரபாதம். 9

பாத்யம் விராஜதி ஸுவர்ணகடே புரஸ்தாத்
அர்க்யம் க்ருஹாண ஸுரராஜஸுதாப்ரியத்வம்!
ஆசம்யதாம் புவனபாலன லப்ததீக்ஷ!
தாராதரேந்த்ரவஸதே! தவஸுப்ரபாதம். 10

கங்காதிபுண்யஸரிதாம் ஸலிலேன பூர்ணு:
கும்பாஸ்ஸுகாஞ்சனமயா: புரதோ விபாந்தி



ஸ்நானம் குருஷ்வ கருணு தரலாந்தரங்க!
தாராதரேந்த்ரவஸதே! தவஸுப்ரபாதம். 11

ஸ்ரீவல்லிநாயக! தயாதி குணு மிருதாப்தே!
தேவாதிதேவ! ஜகதேக சரண்யமூர்த்தே!
ஸ்ரீநாரதாதி பரிவந்தித பாதபத்ம!
தாராதரேந்த்ரவஸதே! தவஸுப்ரபாதம். 12

அத்ர்யாதிஸப்தரிஷிஸந்நுதஸத்சரித்ர !
த்வத்பாதபத்ம மதுராம்ருதபான ஹேதோ :
த்வாரேஸ்திதா : ப்ரதிதினம் நிகமாகமக்ஞா:
தாராதரேந்த்ரவஸதே ! தவஸுப்ரபாதம். 13

ஏதேத்விஜாஸ்ஸகல சாஸ்த்ரவித : பவித்ரா :
மந்த்ரம் படந்தி மதுரஸ்வர பூர்ணகண்டா :
திஷ்டந்தி பூஜனரதா : வரபக்தியுக்தா :
தாராதரேந்த்ரவஸதே ! தவஸுரபாதம். 14



## ஸ்ரீ கார்த்திகேய பஞ்சரத்னம்

விமலநிஜபதாப்ஜம் வேதவேதாந்த வேத்யம்
மமகுலகுருதேவம் வாத்யகாணப்ரமோஹம்
ரமணஸுகுணஜாலம் ரங்கராட்பாகினேயம்
கமலஜநுதபாதம் கார்த்திகேயம் பஜாமி. 1

# முருகா நூற்றெட்டு

### அழைப்பு

குன்றேறி விளையாடும் குழந்தாயே முருகா
என்னேர மெனைக்காக்க வருவாயே முருகா
மன்ருடி உனைக்கேட்டேன் தருவாயே முருகா
என்றேனும் உன்பாதம் தருவாயே முருகா 4

### பிறப்பு

நடமாடும் ஒருதெய்வம் நெற்றியிலே முருகா
நெருப்பேனவே நதிசேர்ந்து வளர்ந்தாயே முருகா
நங்கையர்கள் ஆறுபேரும் தாலாட்ட முருகா
நாள்தோரும் தமிழ்போல வளர்ந்தாயே முருகா 8



### தேவர் துதி

கொலைபாத அசுரர்கும்பு பொறுக்காது முருகா
ஓலமிட்ட தேவர்போற்ற வந்தாயே முருகா
காலிலிட்ட கழலொலிக்க விளையாட முருகா
வேலெடுத்து வீரம்காட்ட வந்தாயே முருகா 12

### பிரமன் சிறை வைத்தல்

ஆறுபடைவீடமைத்த ஆண்டவனே முருகா
சீரலைவாய் நின்றவனே சண்முகனே முருகா
ஆதியென்ற ப்ரணவந்தனை ஓதுகின்ற முருகா
வேதன்தலை குட்டுப்பட சிறை செய்த முருகா 16

### கடம்பனுடன் பொருதல்

கும்பமுனி போற்றுகின்ற குணாளனே முருகா
வம்புசெய்த கடம்பந்தனை வளைத்தவனே முருகா



தம்பிருனே தமிழ்செய்த தமிழோனே முருகா
எம்பிருனே எனைகாக்க வருவோனே முருகா 20

### திருமாலுக்கு சக்கரம் அளித்தல்

முசுகுந்த சோழவேந்தன் பணிந்துநிற்க முருகா
விசும்பனைய விண்டுதேவன் அடிபணிய முருகா
மெய்புகுந்த சக்கரத்தை தந்தளித்த முருகா
பொய்யாத மழைபோல பொழுதுவந்த முருகா 24

### கிரௌஞ்சம் வீழ்தல்

கோழிக்கொடி வான்பறக்க வளர்ந்துநின்ற முருகா
குடகரையின் கிரௌஞ்சமலை குடைந்தவனே முருகா
வாழிவாழி என்றுபோற்ற வழிநடந்த முருகா
வானவர்க்கு துணைசென்று வாழவைத்த முருகா 28

### தந்தைக்கு உபதேசம்

சோழநாட்டு சாமிமலை மீதமர்ந்த முருகா
சோதிசிவன் தலைவணங்க ஓதுகின்ற முருகா



கோலமயில் ஏறிநின்று கூடல்வந்த முருகா
வேலெடுத்து கோணமலை கோட்டம் நின்ற முருகா 32

### அசுரர்கள் அழிப்பு

ஆரவாரப் பேய்களென அசுரர்மாள முருகா
வீரங்காட்டி வேலெறிந்து வென்றவனே முருகா
போர்பரணி தேவர்பாட போந்தவனே முருகா
பார்புகழ சிலம்பொலிக்க வந்தவனே முருகா 36

சூரர்படை முன்நடந்த இளையோனே முருகா
சூதுமிக்க சூரபதுமனை ஒழித்தோனே முருகா
சிங்கமுகன், தாருகனை வென்றவனே முருகா
சிங்கமென தமிழ்போற்றும் வேலவனே முருகா 40

## தேவயானையார் திருமணம்

நீலமயில் மீதமர்ந்த நெடியோனே முருகா
வேலெறிந்து வெற்புவிழ மகிழ்ந்தோனே முருகா



மூலப்பொருள் முழுஉருவாய் வந்தவனே முருகா
ஓலமிட்டு அசுரர்கூட்டம் ஓடவைத்த முருகா 44

இந்திரனும் தன்மகளை ஈந்துநிற்க முருகா
மந்திரமும் மத்தளமும் தாளம்கொட்ட முருகா
சொந்தமென கைபற்றி நின்றவனே முருகா
கந்தவேளே காமவேளாய் காணநின்ற முருகா 48

தேவர்போற்ற தேவயானை கைபிடித்தோய் முருகா
தேவமகள் யானையோடு பரங்குன்ற முருகா
தேன்பழமுதிர் சோலையாட சென்றவனே முருகா
தமிழ்மணக்க திருமுருகா தினைத்தாயே முருகா 52

## பழமாய் நிற்றல்

ஞானப்பழம் வேண்டிநின்று ஞாலம் சுற்றி முருகா
யானைமுகன் அடைந்ததையே கண்டு கொண்டு முருகா
ஞானமலை பழனிமலை மீதுநின்ற முருகா
தென்பழநி குன்றமர்ந்த வடிவேலா முருகா 56



## வள்ளித் திருமணம்

நம்பிராஜன் பெற்றமகள் வள்ளியம்மை முருகா
நம்பியுன்னை காதலித்து ஆடிப்பாட முருகா
நாரதனும் அதனைவந்து சொல்லிவைக்க முருகா
நங்கை வசம் ஆகவேண்டி சென்றவனே முருகா 60

வேட்டுவனாய் வேடந்தாங்கி சென்றவனே முருகா
வள்ளியம்மை கைபிடிக்க விரும்பிநின்ற முருகா
தொட்டுவிட வள்ளியம்மை கூச்சல்போட முருகா
காட்டுமரம் வேங்கைபோல மாறிநின்ற முருகா 64
தண்டுஊன்றி கிழவன்போல காதலிக்க முருகா
வேண்டுமென்று மாவைத்தின்று விக்கி விக்கி முருகா
தினைப்புலத்து குளமொன்றில் விழுந்துவிட்ட முருகா
அனைக்கவள்ளி இன்பங்கண்ட வேலவனே முருகா 68

ஆறுமுகன் துணைசெய்ய ஆவல்கொண்ட முருகா
அன்புக்குற மங்கைதனை அணைத்துக் கொண்ட முருகா
ஆணையிட்டு வள்ளிதனை சிறையில் வைக்க முருகா
அன்னை சிறை மீட்டு நின்ற ஆதரித்த முருகா 72



திருத்தணிகை திருப்பதியில் தீருநின்ற முருகா
மருவி நிற்க வள்ளியம்மை மணங்கொண்ட முருகா
அருவிபோல கருணையுள்ளம் கொண்டவனே முருகா
கருமவினை நீங்கிடவே காத்தருள்வாய் முருகா 76

திருமுருகா மால்மருகா வேலவனே முருகா
திருவேலைத் தாங்கிநிற்கும் வடிவேலா முருகா
திருமுருகா எங்கள் வினை தீர்த்தருளும் முருகா
திருமுருகா தெய்வத்தமிழ் வடிவேலா முருகா 80

## திருநின்ற வூர்கள்

ஆறுமுகன் ஆகிநின்ற அரும்பொருளே முருகா
சீர்மேவும் வயலூரில் நின்றவனே முருகா
திருக்கழுகு குன்றமர்ந்த சண்முகனே முருகா
திருப்புகழால் அருணகிரி போற்றுகின்ற முருகா 84



வேங்கடத்து பாறைதனில் வேலெடுத்த முருகா
கொங்குமலை, தீர்த்தமலை, அண்ணாமலை முருகா
கங்கைநிகர் பொன்னிபாயும் பூமியிலே முருகா
பொங்குபுகழ் சிராப்பள்ளி மலை நின்ற முருகா 88

திருமயிலை, கயிலைமலை மீதுநின்ற முருகா
திருப்பதியாம் செங்கோட்டில் நின்றவனே முருகா
திருவானைக்காவலூரில் காவல்நின்ற முருகா
திருவருணை, காளத்தி கண்டு நின்ற முருகா 92

வள்ளிமலை, விராலிமலை, மீதமர்ந்த முருகா
வள்ளியூரில், சிதம்பரத்தில் வந்தமர்ந்த முருகா
வடபழநி, ஆலங்காடு சென்றவனே முருகா
வடக்கு திரு முல்லைவாயில் வந்து நின்ற முருகா 96




கோடைநகர் போரூரில் காணநின்ற முருகா
கந்தகோட்டம் குமரகோட்டம் சென்றமர்ந்த முருகா
குடமுக்கு ஒற்றியூரில் சென்றமர்ந்த முருகா
இடைக்கழியில், கந்தன் குடி, எட்டுகுடி முருகா 100

**வேண்டல்**

மதுராந்த மீது நின்ற மணவாளா முருகா
மயிலத்தில் காசிநகர் வந்தமர்ந்த முருகா
மதுரைநகர், சிக்கலில் காணநின்ற முருகா
மனமிரங்கி ஏழைஎன்னை காத்திடுவாய் முருகா 104

**போற்றல்**

வேல்முருகா வேல்முருகா வேல்முருகா வேல்வேல்
வேல்முருகா வேல்முருகா வேல்முருகா வேல்வேல்
வேல்வேல் வேல் முருக வேல் வேல் வேல்
வேல் வேல் வேல் வடி வேல் வேல் வேல் 108

மயூராதிரூடம் மஹாவாக்ய கூடம்
மனோஹாரி தேஹம் மஹச்சித்த கேஹம் |
மஹீதேவதேவம் மஹா வேதபாவம்
மஹாதேவ பாலம் பஜே லோகபாலம் ||

